# திருவண்ணாமலை

# கார்த்திகை தீப வெண்பா



அருள்மிகு அருணாசலேசுவரர் திருக்கோயில்

திருவண்ணாமலை

# திருவண்ணாமலை
# கார்த்திகை தீப வெண்பா

புராணிகர் சோணாசல பாரதியார்

அருளிய

கார்த்திகைத் தீப வெண்பா

சோணாசல வெண்பா

சோணாசல சதகம்

திருவருணைக்கலி வெண்பா

திருவருட்பிரகாச வள்ளலார்

அருளிய

திருவண்ணாமலை திருவருட்பதிகம்

*வெளியீடு*

அருள்மிகு அருணாசலேசுவரர் திருக்கோயில்

திருவண்ணாமலை

12.12.97.

ஈஸ்வர ஆண்டு கார்த்திகைத் திங்கள் 27-ம் நாள்

விலை : ரூ.**15-00**

# அருள்மிகு அருணாசலேசுவரர் திருக்கோயில்,
# திருவண்ணாமலை

## பொருளடக்கம்

வ.எண்.


1. **முன்னுரை**
மாண்புமிகு அறநிலையத்துறை,
தமிழ் ஆட்சிமொழி, தமிழ் பண்பாட்டுத்துறை அமைச்சர்
**திரு. மு. தமிழ்க்குடிமகன்**

2. **அணிந்துரை**
மாண்புமிகு வீட்டுவசதித்துறை அமைச்சர்
**திரு. கு. பிச்சாண்டி, எம்.ஏ.**

3. **பாராட்டுரை**
**திரு. கி. தர்மராசன், இ.ஆ.ப.,**
செயலாளர்,
வணிகவரி மற்றும் அறநிலையத்துறை,
தலைமைச் செயலகம்.

4. **வாழ்த்துரை**
**திரு. ச. மெய்கண்டதேவன், இ.ஆ.ப.,**
ஆணையாளர்,
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை
அருள்மிகு அருணாசலேசுவரர் திருக்கோயில்,
திருவண்ணாமலை

*மாண்புமிகு திரு. மு. தமிழ்க்குடிமகன்,*
*அறநிலையத்துறை மற்றும் தமிழ் ஆட்சி மொழி,*
*தமிழ்ப் பண்பாட்டுத்துறை அமைச்சர்,*
*தமிழ்நாடு அரசு,*
*சென்னை-9.*

# முன்னுரை

பழம் பெருந்திரு நகரமாகிய திருவண்ணாமலையில், மாபெருஞ் சிவாலயம் ஒன்று பழமைக் கலைச் சிறப்புடன் அமைந்திருப்பது நமக்கெல்லாம் மகிழ்ச்சி தரக்கூடிய ஓரமைப்பாகும். இத்தகைய திருக்கோயில்களையும், கோயில்களைப் பற்றிய வரலாற்று நூல்களையும் போற்றிக் காப்பது நம் கடமையாகும். இந்த வெளியீட்டிற்கு முன் சைவ எல்லப்ப நாவலர் இயற்றிய அருணாசலப் புராணம் வெளியிடப் பெற்றது. அதனை அடுத்து, கார்த்திகைத் தீப வெண்பா, சோணாசல வெண்பா, திருவருணைக் கலம்பகம், திருவருணை அந்தாதி, திருவருணைக் கலிவெண்பா ஆகிய நூல்கள் வெளியிடப் பெறுகின்றன.

இந்த நூல்களில் அறிவுரை அருளுரை ஆகியவை எளிய இனிய தமிழ் நடையில் கூறப்பெற்றுள்ளன. சைவ எல்லப்ப நாவலர் அண்ணாமலையைப் பற்றிப் பல நூல்கள் இயற்றியுள்ளார். அதனால் அருணையின் பெருமை புலவர்களை மிகவும் கவர்ந்திருக்கிறது என்ற உண்மை வெளியாகிறது. கார்த்திகைத் தீப வெண்பாவில், ஒரு பாடல்:

"கற்றலுடன் கேட்டுணர்ந்து காதலுடன் சிந்தித் தோர்க்(கு)
உற்ற துணையாய் உறுதீபம் - சொற்ற கதிக்(கு)
ஏணிநிகர் சோணகிரி ஏர்முடிமேல் அஞ்சல்எனும்
பாணிநிகர் கார்த்திகைத்தீபம்" என்ற பாடலில்

தீப ஒளியைக் கற்பனை நயம்படக் கூறுவது மிகவும் போற்றக்கூடியதாகும். தீபத்திருவிழா உலகில் மிகப்பழமையான விழா என்பதைச் சங்க இலக்கியங்களின் வாயிலாகவும் அறியக்கூடும். தீபக் காட்சியை மட்டும் பல்வேறு வகையாகப் பகர்கிறது கார்த்திகைத் தீப வெண்பா. இவ்வாறே சோணாசல வெண்பாவும், உண்ணாமுலை அம்மைப் பிள்ளைத் தமிழும் அண்ணாமலையின் தெய்வீகச் சிறப்பை இனிய செந்தமிழால் விளக்குகின்றன. இத்தகைய சிறந்த நூல்களைப் போற்றிக்காக்க வேண்டும் என்ற நோக்கத்துடன், அறநிலையத் துறையினர், இத்தகைய நூல்களை முயன்று வெளியிட்டு வருகின்றனர். மேலும், அருணையைப் பற்றிய பல நூல்கள், வெளியிடத்தக்கனவாகக் காணப்பெறுகின்றன. அந்நூல்களும் தொடர்ந்து வெளியிடப்பெறும் என்று நம்புகிறேன். இத்தகைய நல்ல முயற்சியை மேற்கொண்டவர்களை உளமாரப் போற்றி மகிழ்கிறேன்.

இங்ஙனம்,

**மு. தமிழ்க்குடிமகன்**

*மாண்புமிகு கு. **பிச்சாண்டி**, எம்.ஏ.,*
*வீட்டு வசதித்துறை அமைச்சர்,*
*தமிழ்நாடு அரசு,*
*சென்னை-9.*

## அணிந்துரை

மிகப்பழமை தொட்டே, அண்ணாமலையை நாடி அறிஞர்களும், புலவர்களும், புரவலர்களும், புனிதப் பயணத்தை மேற்கொள்பவர்களும் வந்தனர். இங்கே கிடைக்கும் மன அமைதி காரணமாகப் பலர், பல நாட்கள் இங்கே தங்கினர். அறிஞர்களாகவும், அருளாளர்களாகவும் இருந்தவர்கள், இங்கிருந்தே நூல்களையும் இயற்றினர். அத்தகையவர்களுள், சைவ-எல்லப்ப நாவலர் அவர்களும், குகை நமச்சிவாயர், குருநமச்சிவாயர் அவர்களும் குறிப்பிடத்தக்கவராவர். இவர்கள் பல நூல்களை இயற்றியுள்ளனர். இந்தப் புனித நகரம் அவர்களை ஈர்த்தது என்ற உண்மையை அவர்தம் பாடல்களின் வாயிலாகவே அறியலாம்.

"போதமற்ற மெய்யடியார் புந்தியிலே வேரோடிப்
பாதம் உச்சி மட்டாய்ப் படர்ந்தமலை - நாதம்
தழைக்குமலை அன்பர் தபோதனரை வாவென்(று)
அழைக்குமலை அண்ணா மலை" என்ற பாடலில் அன்பர் தபோதனரை

வாவென்று அழைக்கும் மலை என்று கூறுகிறார். இந்நகரில் தங்கியிருந்தவர்கள், நூற்றுக்கணக்கான பாடல்களைப் பாடினர். இந்த உண்மையை ஒரு வெண்பாவில் குறிப்பிடுகிறார் குருநமச்சிவாய சுவாமிகள்.

"நண்பாக் குகையில் நமச்சிவா யன்கருத்தில்
வெண்பாப் பயிராய் விளையுமலை" என்று சொல்கிறார்.

திருவண்ணாமலையில் உள்ள மலையில் வெண்பாவே பயிராக விளைகிறது என்று பாடுகிறார். இதன் வாயிலாக, இங்குள்ள மலையில் தங்கியவர்கள் நூற்றுக்கணக்கான பாடல்களைப் பாடினார்கள் என்று தெரிகிறது. இத்தகைய அருளாளர்களால் இயற்றப்பெற்ற நூல்களே, இந்தக் கார்த்திகைத் தீபவெண்பா, சோணாசல வெண்பா, அருணைக் கலம்பகம், சோணாசல வெண்பா உண்ணாமுலை அம்மைப் பிள்ளைத் தமிழ் முதலிய நூல்கள். இந்த நூல்களை, ஆர்வத்துடன் முயன்று வெளியிட்ட, அறநிலையத் துறையைச் சார்ந்தவர்களுக்கு என் பாராட்டுதலையும், வாழ்த்தினையும் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் இத்தகைய பணி தொடர வேண்டும் என்று விரும்புகிறேன். வாழ்க! வாழ்க!!

இங்ஙனம்,

**கு. பிச்சாண்டி**

**திரு. கி. தர்மராசன்,** இ.ஆ.ப.,
செயலாளர்
**வணிகவரி மற்றும் அறநிலையத்துறை,**
தலைமைச் செயலகம்,
சென்னை – 600 009.

# பாராட்டுரை

ஐம்பெரும் பூதத்தலங்களுள் திருவண்ணாமலை நடுநாயகமாகச் சிறந்து விளங்குகிறது. இத்தலத்தில் நடைபெறும் தீபப் பெருவிழா மிக மிகப் பழமை வாய்ந்து விளங்குகிறது, "தொல் கார்த்திகை நாள் விளக்கீடு" என்று இலக்கியங்கள் போற்றுகின்றன. இத்தலத்தில் உள்ள மலையையே சிவலிங்கமாகக் கருதித் தபோதனர்களும், புலவர்களும், அன்பர்களும் அன்று முதல் இன்று வரை, போற்றிப் புகழ்ந்து பாடிப் பரவி வருகின்றனர். இலட்சக் கணக்கான மக்கள் இம்மலையை வலம் செய்கின்றனர். உருண்டும் வலம் செய்கின்றனர்.

பல திருத்தலங்களில் மலையில் தெய்வம் எழுந்தருளியிருக்கிறது. ஆனால் இத்தலத்தில் மலையே தெய்வமாகக் கருதி வழிபாடு செய்யப்பெற்று வருகிறது.

**"ஏருலாம் அண்டச்சுவர் மதிலா மிசைப்பால்**
**இலங்குறும் அண்டகோளகையாகச்**

சாரும் ஆலயத்தில் இலிங்கமாம் சோண
சைலனே கைலைநாயகனே" என்று சோணசைல மாலையில் சிவப்பிரகாசர் பாடுகிறார். இத்திருத்தலத்தைப் பற்றிய நூல்கள் ஐம்பதுக்கும் மேலாக உள்ளன. அவற்றுள் அடங்கியனவே, இப்போது வெளியிடப்பெறும், கார்த்திகைத் தீப வெண்பா, சோணாசலவெண்பா, அருணைக்கலம்பகம், திருவருணை அந்தாதி உண்ணாமுலை அம்மைப் பிள்ளைத் தமிழ் முதலியன. முருகப் பெருமானை அருச்சித்தற்குரிய ஆயிரத்தெட்டுப் போற்றிகளும் வெளியிடப் பெற்றுள்ளன. "கார்த்திகைத் தீபவெண்பா" என்ற நூல் தீபக் காட்சியை பல்வேறு கோணங்களில் சிறப்பித்துக் கூறுகிறது.

"இட்டவிதி சாபம் இரிந்தோடப் போற்றிசைக்கும்
அட்ட வசுக்கட்கும் அருள்தீபம் – சிட்டர்
வதிதருசீர்ச் சோண மலைத்தீபம் எம்முள்
பதிதருசீர்க் கார்த்திகைத் தீபம்" என்ற வெண்பாவில்

தீபக் காட்சியால் உண்டாகும் பயன் கூறப்படுகிறது. சிறந்த தபோதனர்களாலும், பொய்யடிமை இல்லாத புலவர்களாலும் இயற்றப்பெற்ற இந்நூல்கள், கால வெள்ளத்தால் கவரப்படாமல் காப்பாற்றப்பெறல் வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடன் அந்நூல்களை முயன்று வெளியிட்ட அறநிலையத்துறை அலுவலர்களை உளமாரப் பாராட்டுகிறேன். இறைவன் அனைவர்க்கும் அருள் பாலிக்க வேண்டுகிறேன்.

இங்ஙனம்
கி. தர்மராசன்

*திரு. ச. மெய்கண்டதேவன், இ.ஆ.ப.,*
*ஆணையாளர்,*
*இந்து சமயஅறநிலைய ஆட்சித்துறை,*
*சென்னை - 600 034.*

## வாழ்த்துரை

"ஞானத்தபோதனரை வா என்று அழைக்கும் மலை அண்ணாமலை" என்பது ஒரு மாபெருந் தபோதனருடைய வாக்காகும். நல்லவர் வாழ்ந்த இடத்திற்கும் அல்லவர் வாழ்ந்த இடத்திற்கும் அடையாள ம் உண்டு. நல்லோர் பலர் வாழ்ந்த இடத்தில் அமைதி நிலவும். அளவிலாத் தபோதனர்கள் அருந்தவம் ஆற்றிய திருமலையைத் தன்பால் கொண்டிருப்பதனால் அண்ணாமலைக்கு வரும் அயல் நாட்டினரும் அங்கு அமைதி காண்கின்றனர். அமைதி விழைவோர் நாடுமிடம் திருவண்ணாமலை.

"பவக்கடல் கடந்து முத்தியம் கரையில் படர்பவர்நாளும்
திகைப்புற நோக்கித்
தவக்கலம் நடத்த வளர்ந்தெழும் சோணசைலனே
கைலைநாயகனே" என்று சிவப்பிரகாசர் பாடுகிறார்.

பிறவிக் கடலைக்கடந்து, முத்தியெனும் கரையை நாடிச் செல்பவர், தம் தவமாகிய கப்பலை முத்திக்கரையை நோக்கிச் செலுத்த வேண்டிக் கலங்கரை விளக்கம் போல் உயர்ந்திருக்கின்ற

சோணசைலனே - என்று கூறுகிறார். ஐம்பத்திரண்டு நூல்கள் இத்தலத்தைப் புகழ்ந்து பேசுகின்றன. திருவண்ணாமலையில் தங்கி மக்களுக்கு அருள் பாலித்த தபோதனர் பலர். அவர்களுள் முப்பது தபோதனருடைய வரலாறுகள் கிடைத்துள்ளன. சில தபோதனர்களுடைய வரலாறுகள் அருணாசலப் புராணம் இரண்டாம் பாகத்தில் சேர்க்கப் பெற்றுள்ளன.

அதனைத் தொடர்ந்து, கார்த்திகைத்தீப வெண்பா, சோணாசல வெண்பா அருணைக் கலம்பகம், திருவருணை அந்தாதி, திருவருணைக் கலி வெண்பா, உண்ணாமுலை அம்மைப் பிள்ளைத்தமிழ், வள்ளலார் இயற்றியுள்ள திருவண்ணாமலைப் பதிகம் ஆகிய நூல்கள் வெளியிடப் பெற்றுள்ளன. இருபதாம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் அண்ணாமலைப் பெருமானுக்குத் தொண்டு செய்த அறங்காவலர்கள், திருவண்ணாமலை பற்றிய பல நூல்களை ஒன்று சேர ஒரு நூலாக வெளியிட்டுள்ளார்கள். இன்றைய சூழ்நிலைக்கேற்ப இந்நூல்கள் வாங்குபவர்க்கு எளிதாக இருக்கும் வண்ணம் பகுதி பகுதியாக வெளியிடப் பெறுகின்றன.

கார்த்திகைத் தீப வெண்பாவில், ஒரு பாடல், தீபச் சுடரைக்கண்டு வழிபடுவோரது அறிவு சுடர் விட்டு விளக்கும் என்று கூறுகிறது.

"பந்தவினைப் பாசத்தில் பட்டுழலும் பாதகனேன்
மந்தமதி நீக்கும் வண்தீபம் - சந்தகமும்
கொக்குமிசை நற்குயில்கள் கூவருணைத் தீபமுயர்
பக்குவர்காண் கார்த்திகைத்தீபம்" என்று அவ்வெண்பா.

கார்த்திகைத் திங்கள் கார்த்திகை நாளில் ஏற்றப்படும் தீப விளக்கைப் பற்றித் தொல்காப்பியம் பேசுகிறது. "நலமிகு கார்த்திகை நாட்டவர் இட்ட தலைநாள் விளக்கு "எனக்கார் நாற்பது விளக்குகிறது". "கார்த்திகைச் சாற்றில் கழிவிளக்கைப்போன்ற" என்று களவழி நாற்பது பேசுகிறது. எனவே தீபப்பெருவிழா பரத கண்டத்திலே புனித விழாவாகவும், போற்றப்படும் விழாவாகவும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. அக்காரணம் பற்றியே, "கார்த்திகைத் தீப வெண்பா" என்றே ஒரு நூலை ஒரு பெரும்புலவர் எழுதி உள்ளார். வெளியிடப்பெற்றுள்ள ஒவ்வொரு நூலும் ஒரு தனிச்சிறப்புடைய நூலாக விளங்குவதைக் காணலாம். இத்தகைய நூல்களை ஆர்வத்துடன் முயன்று வெளியிட்ட அறநிலையத்துறை அலுவலர்கள் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து சிறந்த பணிகளைச் சிந்தை மகிழச் செய்து சிறப்புடன் வாழ்ந்திட அருள்மிகு - அண்ணாமலை அண்ணலையும் அருள்மிகு உண்ணாமுலைத் தாயாரையும் வாழ்த்தி வணங்குகிறேன்.

இங்ஙனம்,

**ச. மெய்கண்ட தேவன்**

உ

சிவமயம்

புராணிகர் சோணாசலபாரதியார்

இயற்றிய

# திருவண்ணாமலை
# கார்த்திகை தீப வெண்பா

### காப்பு - வெண்பா

கீர்த்திபெறுஞ் சோண சிரிமுடியின் மீதொளிருங்
கார்த்திகைத் தீபவெண்பா கட்டுரைக்கப்-பூர்த்தியுற
நம்பந்த வாரணத்தி னாதனரு ளைந்துகரச்
சம்பந்த வாரணத்தின் றாள்

### நூல்

கங்கையணிதீபங் கற்பூர தீபமலை
மங்கயொரு பங்கில் வளர்தீபம்-பங்கயன்மால்
விண்பாரு நேடும்வண மேவியவண் ணாமலையிற்
பண்பாருங் கார்த்திகைத்தீ பம். (1)

அன்ன மளிக்குந்தீப மண்டினரை யாதரித்துப்
பொன்னு மளிக்குந்தீபம் பொற்றீப-மன்னு
மராவணிநேர் காட்டுமெங்க ளண்ணா மலைமேற்
பராவருங் கார்த்திகைத்தீ பம். (2)

மோகாந்த கார முறிந்தோடச் செய்தீப
மோகாந்த மாவந் திடுந்தீப-மாகாந்த
னாங்கார்ந்த தென்றுரைக்க வண்ணா மலைமுடிமேற்
பாங்கார்த்த கார்த்திகைத்தீ பம். (3)

பந்துமுலைப்பாவையர்க்காம் பாங்காருங் கூடலிலே
வந்து வளையல்விற்ற மாதீபங்-கொது
மலர்மலியுஞ் சோண மலைத் தீபம்போற்றிப்
பலர்மலியுங் கார்த்திகைத்தீ பம். (4)

## கார்த்திகைத்தீபவெண்பா.

இட்டவிதி சாப மிரிந்தோடப் போற்றிசைக்கு
மற்ற வசுக்கட் கருடீபஞ்-சிட்டர்
வதிதருசீர்ச் சோண மலைத்தீப மெம்முட்
பதிதருசீர்க் கார்த்திகைத்தீ பம். (5)

ஆதுலரா னீரென்றே யன்றொருசேய்க் காவழக்கு
மாதுலரா வந்துரைத்த வண்டீபந்-தாதுலரா
நந்தனஞ்செய் சூழுஞ்சோ ணாசலத்தி லன்பரன்பிற்
பந்தனஞ்செய் கார்த்திகைத்தீ பம். (6)

நீடுகற்பி னாளுடன்வாழ் நீல்கண்டர் தம்மிடம்வந்
தோடுகவர்ந்த தாண்ட வொருதீப-மாடுமயிற்
கொக்கவிசைவண்டினம்பாடோங் கருணைவெற்பின்மிசைப்
பகீகமிகுங் கார்த்திகைத்தீ பம். (7)

செங்கமல வேதா திலோர்த்தமையைப் பின்றுரத்த
வங்களுக் காவேட னாந்தீபம்-திங்கடவழ்

சோணமலைத் தீபமிகத் தோத்திரஞ்செய் தென்றுமுயர்
சாணர்மகிழ் கார்த்திகைத்தீ பம். (8)

மண்ணிடந்துங் காணா மலரடியின் மாயவனார்
கண்ணிடந்து சாத்திக் களிதீப-மெண்ணிறந்த
கீர்த்திபெறுஞ் சோண கிரித்தீபந் தென்மதுரைப்
பார்த்திபனாங் கார்த்திகைத்தீ பம். (9)

எல்லா வுலகு மிசைய வருச்சுனன்கை
வில்லா லடியுண்ட மெய்த்தீப-பொல்லாக்
கவிதீர்க்குந் தீபங் கனவருணைத் தீபம்
பலியேற்குங் காத்திகைத்தீ பம். (10)

சீரார் சிறுத்தொண்டர் செல்வன் கறியுண்ணப்
பேராரை வைத்த பெருந்தீபங்-காரா
ரருணைகிரித் தீபமனத் தல்லும் பகலும்
பருணிதர்பேற் கார்த்திகைத்தீ பம். (11)

உள்ளதென்னு நல்லோர்கட் குள்ளதா வில்லதெனுங்
கள்ளமனத் தோர்க்கின்பதாக் காண்டீபம்-வெள்ளமதி
மேவுசடைத் தீபம் வியன்கொளரு ணாசலத்திற்
பாவுபுகழ்க் கார்த்திகைத்தீ பம். (12)

தொண்டர்க்குத் தோன்றாத் துணையான தீபநல்ல
வண்டர்க்கு மெட்டா வருட்டீபம்-வண்டமருந்
தோடுடைய பூம்பொழில்சூழ் சோணமலைத் தீபநன்மேம்
பாடுடைய கார்த்திகைத்தீ பம். (13)

வென்றுனே வன்புலனை வீட்டியுணர் கும்பமுனிக்
கன்றுமணக் கோலமரு டீபஞ்-சென்றுவியன்
விண்ணளக்குஞ் சோணகிரி மேற்றீப மன்பருக்குப்
பண்ணளிக்குங் காத்திகைத்தீ பம். (14)

போற்றுமடி யார்க்கருளும் புண்ணியதீ பம்வினையை
மாற்றுமருந் தாகு மணித்தீபஞ்-சாற்றுமறை
யுன்னரிய சோணமலை யோங்கிவள ருந்தீபம்
பன்னரிய கார்த்திகைத்தீ பம். (15)

சிற்றம் பலத்திற் றிருகடனங்செய் தீபமன்பர்
குற்றம் பலகுணமாக் கொள்தீப-மற்றந்
துடைத்தருளுஞ் சோணமலைத் தோன்றியதீ பஞ்சீர்
படைத்தருளுங் கார்த்திகைத்தீ பம். (16)

கஞ்சமலர்க் கண்ணனயன் காண்பரிய தீபமெனுள்
வஞ்சமல மகற்றும் வான்றீப-நஞ்ச
மயிலுமுயர் தீபமெழி றண்ணா மலைமேற்
பயிலுமொரு கார்த்திகைத்தீ பம். (17)

அன்பருளத் தேயகலா வானந்த தீபம்பே
ரின்பருளத் தோன்று மெழிற்றீபம்-வன்பருளத்
துற்றறியா தீபம்வள மோங்குமரு ணாசலத்திற்
பற்றகலாக் கார்த்திகைத்தீ பம். (18)

ஆலால சுந்தரரை யன்றுமணந் தடுத்து
மேலா வுவந்தாண்ட மெய்த்தீபம்-பாலாழி

யோர்புதல்வ னுக்கருளி யோங்குமரு ணைத்தீபம்
பார்புகழுங் கார்த்திகைத் தீபம். (19)

வாதவூ ரன்பர் மகிழப் பெருந்துறையிற்
போதமளித்த புகழ்த்தீப-மேத
மகலவருந் தீபமுய ரண்ணா மலையிற்
பகலவனேர் கார்த்திகைத்தீ பம். (20)

முத்திக்கு வித்தா முளைத்தெழுந்த தீபமெழிற்
சத்திக் கொருபால் தருதீப-மெத்திக்கு
மார்த்துமிக்கு மன்புடனே யண்ணா மலைமீது
பார்த்துவக்குக் கார்த்திகைத்தீ பம். (21)

போதாந்தப் புண்ணியர்கள் போற்றிசைக்கும் தீபம்விந்து
நாதாந்த முங்கடந்த நற்றீபம்-வேதாந்தச்
சித்திதருந் தீபந் திருவருணைத் தீபநல்ல
பத்திதருங் கார்த்திகைத்தீ பம். (22)

பாணனுக்கோர் சத்துருவாம் பாடகனைக் கூடலிலே
நாணமுற்றே டப்பாடு நற்றீபம்-பேணி
யயனுமரி யுங்காணா வண்ணா மலையிற்
பயனுருவாங் கார்த்திகைத்தீ பம். (23)

முத்திநெறி காணவென்று முன்னுமன்ப ருக்குமுன்னம்
பத்திநெறி காட்டிப் படர்தீபச்-சத்திநெறி
யோடுதவஞ் செய்யருணை யோங்கித்தீ பம்பெரியோர்
பாடுமெழிற் கார்த்திகைத்தீ பம். (24)

சத்தான தீபமுயர் சன்மார்க்க ருள்ளத்தில்
வித்தா முளைத்து மிளிர்தீப-முத்தான
மோங்கு கரிக ளுலவுமரு ணாசலத்திற்
பாங்குபெறுங் கார்த்திகைத்தீ பம். (25)

இன்பந்த தருதீப மேத்திப் பணிந்தோர்க
டுன்பவிரு ளோட்டுஞ் சுடர்த்தீப-மன்ப
ரவமறுக்குந் தீப மருணைவளர் தீபம்
பவமறுக்குங் காத்திகைத்தீ பம். (26)

அஞ்ஞானம் போக்கி யருடீபமானந்த
மெய்ஞ்ஞானங் காட்டி மிளிர்தீப-மெஞ்ஞான்றுஞ்
சித்தர்மகிழ் சோணகிரித் தீபம் பணிந்தேத்தும்
பத்தர்மகிழ் கார்த்திகைத்தீ பம். (27)

நட்டம் புரிதீப நல்லடியார் தங்கள்கொடுங்
கட்டங்களையே களைதீப-மட்ட
திசைமேவு மெங்கடிருவருணைத் தீபம்
பசைமேவுங் கார்த்திகைத்தீ பம். (28)

நாடியடி பார்ப்பரவு ஞானதீ பம்மறைக்கு
நேடி யரியா நெறித்தீப-நீடுந்
திருவருணைத் தீபந் தினமமரர் போற்றிப்
பருவரல்தீர் கார்த்திகைத்தீ பம். (29)

நாலா ரணமு நவிலரிய ஞானமெனு
மேலான போகம் விளைதீப-மாலால்
முண்டமரர் தங்களிட ரோட்டருணைத் தீபமன்பாய்
பண்டமருங் கார்த்திகைத்தீ பம். (30)

சென்மப் பிணிதீர்க்குந் தீபமடி யார்செய்கொடுங்
கன்மவினை போக்குங் கனதீப-மன்பதனை
யங்கமிலா தாக்கியரு ளண்ணா மலைத்தீபம்
பங்கமிலாக் கார்த்திகைத்தீ பம். (31)

மாமறைக்கு மெட்டா மணித்தீப மேழைகட்குச்
சேமமளித் துக்காக்குஞ் சீர்த்தீபந்-தாமரையு
நத்துமொளிர் வண்சுனைச் சோணாசல தீபந்திசைகள்
பத்துமொளிர் கார்த்திகைத்தீ பம். (32)

கற்றைச் சடைமுனிவர் காண்டீப மாருரிற்
புற்றையிடங் கொண்டுறையும் பொற்றீப-மொற்றைத்
தவளவநத் தந்தனைமுன் றந்த வருணைப்
பவளவநக் கார்த்திகைத்தீ பம். (33)

மன்னு மிளசைநகர் மாறன் முளைவாரி
யன்னமிடைச் சேவை யருடீபம்-வன்னச்
சிகரநெடுங் கோபுரஞ்சேர் தென்னருணைத்தீ பம்
பகரமிகுங் கார்த்திகைத்தீ பம். (34)

நாவுக்கு வேந்து நமச்சிவா யப்பதிகப்
பாவுக்குக் கன்மிதக்கப் பண்டீபம்-வாவித்
கயன்மேய்க் கமுகுடைக்குங் காமரரு ணைக்கோன்
பயன்மேவுங் கார்த்திகைத்தீ பம். (35)

சிந்தைக் கலக்கந் தெளிவிக்குந் தீபந்தாய்
தந்தைக் கிணையாகச் சார்தீபம்-விந்தை
மதினிலவுக் காறா வளரு மருணைப்
பதிநிலவுங் கார்த்திகைத்தீ பம். (36)

மன்னுயிர்கட் கோருயிரா வந்தருளுந் தீபமறை
யுன்னுதற்கு மெட்டாத வோர்தீபம்-பொன்னுலகைக்
கீழாக்குஞ் சோணகிரித் தீபம் வெவ்வினையைப்
பாழாக்குங் கார்த்திகைத்தீ பம். (37)

மூவருக்கு ளாதி முதலான தீபமுயர்
தேவருக்குங் காண்பரிய சீர்த்தீப-மேவருவி
யாலிக்குஞ் சோணமலை யார்ந்தசெழுந் தீபமின்பம்
பாலிக்குங் கார்த்திகைத்தீ பம். (38)

கந்தனையு ஞானமதக் காரானை மாமுகத்தோர்
தந்தனையுஞ் சேயாத் தருதீப-மெந்தமைக்க
ணோக்கியருள் சோணமலை நோன்றீப மன்பருக்குப்
பாக்கிமாங் கார்த்திகைத்தீ பம். (39)

வேலனைநேர் மார்க்கண்டேயர் மேவுசிவ பூசைக்காக்
காலனையு தைத்த கனதீபம்-கோல
விதுமகிழுஞ் சோணகிரி வேணுவின்மேற் சூடும்
பதுமநிகர் கார்த்திகைத்தீ பம். (40)

தக்கனுக்கு மேடத் தலையளித்த தீபமென்று
நக்கனெனப் பேர்படைத்த தற்றீப-மிக்க
விருப்பதனாற் சார்ந்தார் வினைதீர்க்குஞ் சோணப்
பருப்பதஞ்சேர் கார்த்திகைத்தீ பம். (41)

கற்றலுடன் கேட்டுணர்ந்து காதலுடன் சிந்தித்தோர்க்
குற்றதுணையா வுறுதீபஞ்-சொற்றகதிக்
கேணிநிகர் சோணகிரி யேர்முடிமே லஞ்சலெனும்
ஏணிநிகர் கார்த்திகைத்தீ பம். (42)

பண்ணுடனே தேவாரம் பாடுமு வர்க்கிமவான்
பெண்ணுடனே தோன்றும் பெருந்தீபம்-விண்ணுடனே
சேரமலை வான்புவிக்காச் செல்வதுபோ லோங்கருணைப்
பாரமலைக் கார்த்திகைத்தீ பம். (43)

தந்தைதிருத் தாடடிந்த சண்டே சுரருக்குச்
சிந்தைமகிழ் தீபஞ் செழுந்தீப-முந்தை
யொருமுடிவில் லாமலுய ரருணை வெற்பின்
பருமுடியிற் கார்த்திகைத்தீ பம். (44)

பஞ்சாக் கரத்தைமிக்கு பத்தியுட னுன்னுணர்க்கு
விஞ்சாக்க மாக மிளிர்தீப-மஞ்சார்க்கச்
சிங்கமுழை விட்டகலாத் தென்னருணை வெற்புறுமோர்
பங்கதழ்வாங் கார்த்திகைத்தீ பம். (45)

பந்தவினைப் பாசத்திற் பட்டுழலும் பாதகனேன்
மந்தமதி நீக்கும் வண்டீபஞ்-சந்ததமுங்
கொக்குமிசை நற்குயில்கள் கூவருணைத் தீபமுயர்
பக்குவர்காண் கார்த்திகைத்தீ பம். (46)

ஏதம் பெரிதுடையே னேத்துந்தீ பஞ்சாம்
வேதம் பெரிதும் விழைதீபங்-கேதம்
புலிக்குங்கோ விக்குமிலாப் பொன்னருணை வெற்பிற்
பலிக்குஞ்சீர்க் கார்த்திகைத்தீ பம். (47)

வன்னிமதி சென்னிமிசை வைத்தருளுந் தீபமறை
பன்னி மதிக்கப் படாத்தீபங்-கன்னிமதிற்
சூரியற்கு மேலுயருஞ் சோணமலை மீதுவளர்
பாரியநற் கார்த்திகைத்தீ பம். (48)

ஆர்த்துவந்தி டுங்கொடுங்க யாசுரனை யன்றெருநா
வீர்த்துரித்துப் போர்த்த வெழிற்றீபம்-பார்த்துரைக்க
வொண்ணாத சோணகிரி யோங்கியதீ பங்கோபம்
பண்ணாத கார்த்திகைத்தீ பம். (49)

பொய்வசமாம் வஞ்சமனம் போமழியா மூவர்களாற்
சைவசமயந் தருதீபந்-தெய்வ
முனிவர்நித்த முண்மகிழ்ந்து மெய்யருணை சார்ந்தார்
பணியகற்றுங் கார்த்திகைத்தீ பம். (50)

பாருருந்தி னோவ்றுதித்தல் பண்டீபம் வாவிகரை
சீரிருந்தி யேறக் கிளர்தீப-நீரருந்திச்
சீவனஞ்செய் மாதவர்வாழ் தென்னருணைத் தீபமெம்மைப்
பாவனஞ்செய் கார்த்திகைத்தீ பம். (51)

தாருவன மாதவர்க டாம்விடுத்த வேங்கைதனை
கூருகிரினா லுரித்துக் கொள்தீப-மேருமுக
லோங்குமலை யெட்டினுமிக் கோங்குமரு ணாசலத்திற்
பாங்குமலி கார்த்திகைத்தீ பம். (52)

நன்றுபுரி பொன்னனையா னன்னுதிருப் பூவணத்திற்
சென்றுரச வாதமது செய்தீபங்-கன்றுகளுக்
கம்பிடிகை யாலருத்தி யாடுசுனைச் சோணமலைப்
பம்பிவளர் கார்த்திகைத்தீ பம். (53)

மாயப் பசுவமணர் மாமதுரைக் கேவவதை
வீயச் சமர்செய் விடைத்தீப - நேயமா
னீராட் டுவனேர்க்கார் நீள்சோண வெற்பிலன்பர்
பாராட்டுங் கார்த்திகைத்தீ பம். (54)

போதனந்த ரத்தவரும் போற்றுந் தீபங்கொடியேன்
கோதனந்த மும்பொறுத்துக் கொள்தீப-நாதனண்டந்
தாங்கனிகர் பண்டுபலாத் தாங்கிவளர் சோணமலைப்
பாங்கமருங் கார்த்திகைத்தீ பம். (55)

பொன்புரையுஞ் செம்மேனிப் புண்ணியதீ பஞ்சிறிய
வென்புரைமுற் றுந்தீர்த் திடுந்தீப-மன்புரைகொண்
டேத்தியமாத் தொடண்டர்களுக் கென்றுமரு ணாசலத்திற்
பார்த்தியபாங்கார்த்திகைத்தீ பம். (56)

பாவிகளும் வந்தேத்திடப் பார்த்துப் பணிவாரேன்
மேவிவினை தீர்த்தருளு மெய்த்தீபம்-தேவிமுலை
தீட்டுதொய்ய னேர்மயில்சேர் கென்னருணை வெற்பிலன்பர்
பாட்டுவக்குங் கார்த்திகைத்தீ பம். (57)

சோமனைக் காருண்ணியமாச் சூடுந்தீ பங்கொடிய
வேமனைக்கால் கொண்டோச் செழிற்றீபந்-தாமரைக
ணெற்றிவளர் கண்போல நீளுமரு ணாசலத்திற்
பற்றிவளர் கார்த்திகைத்தீ பம். (58)

கோளுங் கொலையுங் குடிகெடுப்பு மாணவமு
நீளுமவர்க் கெட்டாது நீடிப-நாளுந்
திடமிக்குஞ் சோணமலைச் சென்னிவளர் நாகப்
படமொக்குங் கார்த்திகைத்தீ பம். (59)

தில்லையம்ப லத்திற் றிருநடனஞ் செய்தீப
மொல்லையினி லின்பமுத வுந்தீப-மெல்லை
யிலாண்டுதவஞ் செய்தவரா லேரருணை வெற்பிற்
பல்லாண்டுபெறுங் கார்த்திகைத்தீ பம். (60)

ஆவலிப்பொன் மேருவில்லா வம்பரியாச் சேடனையே
நாணியெனக் கொண்டுர் நகைதீபம்-வேணி
விழுதிலா ரத்தவர்கண் மேவருணை வெற்பிற்
பழுதிலாக் கார்த்திகைத்தீ பம். (61)

மின்னார் மணியரவும் வெண்மதியு நேசிக்கப்
பொன்னார் சடைமேற் புனைதீப-நன்னாரி
பூரிக்குங் கும்பமுலை போலோங்குஞ் சோணமலைப்
பாரிக்குங் கார்த்திகைத்தீ பம். (62)

பன்னருஞ்சம் பந்தருக்குப் பத்தருநற் பல்லக்குஞ்
சின்னமுமுத் தாலளித்த சீர்த்தீபஞ்-செந்நெற்
கழனிபுடை சூழருணைக் காமர்மலை மீது
பழநிமலைக் கார்த்திகைத்தீ பம். (63)

பாகத் துமையும் படர்சடைமேற் சானவியு
மோகத் துடன்வாழ் முதிர்-தீபமேகத்
துழனிமிக்கார் சோணமலைத் தூய்முடிமேன் ஞானப்
பழநிகர்க்குங் கார்த்திகைத்தீ பம். (64)

பொல்லா மலவிருட்டைப் போக்குந்தீ பம்புவன
மெல்லாந்தா மாகு மெழிற்றீபம்-வல்லாளன்
மைந்தனென வந்த மகிமையரு ணாசலத்திற்
பந்தமிகுங் கார்த்திகைத்தீ பம். (65)

எங்கெங்கே யன்பரிருந் தெவ்வாறு வேண்டுகினு
மங்கங்கே யவ்வா றருடீபஞ்-சிங்கக்கேட்
டஞ்சமுகட் டார்ந்துமுகி லார்க்குமரு ணாசலத்திற்
பஞ்சமுகக் கார்த்திகைத்தீ பம். (66)

எட்டுமிரண் டுந்தெரியா வேழையே மென்பாருட்
கட்டுப்பட் டோங்குங் கனதீப-மட்டிலா
மேன்மைதரு சோணகிரி மேவும்பிறைக் கொழுந்தின்
பான்மைதரு கார்த்திகைத்தீ பம். (67)

கங்கைதனை யேவியெழிற் கம்பா நதியிலுமை
கொங்கை வலைத்தழும்பு கொள்தீபஞ்-சங்கையிலாப்
புங்கவர்சேர் சோணகிரிப் பொற்சடையாற் றீற்பூதப்
பங்கயநேர் கார்த்திகைத்தீ பம். (68)

செம்மையடி யார்பூசை செய்துவந்த காரைக்கா
லம்மைக்கா லங்காட் டருடீபம்-வெம்மை
யரிகரிக்கு மில்லா வருணையடைந் தார்நோய்
பரிகரிக்குங் காத்திகைத்தீ பம். (69)

காணரிய மெய்ஞ்ஞானக் காட்சியரு டீபமன்பர்
வேணவரந் தந்தருளு மெய்த்தீப்ஞ்-சோண
கிரிமுடிக்கண் மேவியொளி கேழ்புவன முற்றும்
பரிமளிக்குங் கார்த்திகைத்தீ பம் (70)

பாண்டுமகன் வில்லாற் பரிந்தடிக்கப் பாசுபத
மாண்டுமையோ டெய்தி யருடீப-நீண்டு
விசும்புருவு சோணகிரி வெந்தழலி ளிட்ட
பசும்பொனிகர் கார்த்திகைத்தீ பம். (71)

பன்னற் கரியசெழும் பச்சைப் பவளமென
வன்ன மிரண்டா வளர்தீபந்-தென்னருணை
வெற்பரெனும் வெந்தழலின் வெந்திட்ட வெண்கட்டிப்
பற்பநிகர் கார்த்திகைத்தீ பம். (72)

மான்மேற் புலிபோல் வருமிடரேல் லாம்போக்கி
பானமே லிவர்ந்தெனைவந் தாடீப-மேன்மை
பணிகொ ளருணாசலமா மம்புபமே லுற்ற
பணிலநிகர் கார்த்திகைத்தீ பம். (73)

தேடரிய தீபஞ் சிதம்பரத்தி லாலெடுத்து
நாடறியப் பேர்படைத்த நற்றீப-நீடக்
கசியார்க் குவக்காக் கனவருணை சார்ந்தார்
பசிதீர்க்குங் காத்திகைத்தீ பம். (74)

சாகையுடன் சாத்திரமுஞ் சாற்றரிய பல்கலையு
மாகமபு ராணமுத லாந்தீபந்-தேகப்
பிணியகல வந்தெவரும் பேசிமகிழ்ந் தேத்திப்
பணியருணை கார்த்திகைத்தீ பம். (75)

துப்பற்ற வென்னையுமோர் தொண்டாகக் கொள்தீபந்
தப்பற்ற சேவை தருதீப-மொப்பற்ற
வட்டாங்க யோகிகள்வாழ் வார்ந்தவரு ணாசலத்திற்
பட்டாங் கார்த்திகைத்தீ பம். (76)

தூர்த்தவடி வாய்வந்து தோரா வியற்பகையார்
சீர்த்தவில் லாளைக்கொண்டு செல்தீபந்-தீர்த்த
நலனாகுஞ் சோணமலை நாடுனர்க்குக் கிட்டும்
பலனாகுங் கார்த்திகைத்தீ பம். (77)

கொக்கிறகும் வெள்ளெருக்குங் கோணாகலாமதியு
மக்கு மணியு மணிதீப-மிக்க
வரிசைநிற்ற சோணகிரி வாழ்த் துநர்க்கு வேண்டும்
பரிசளிக்குங் கார்த்திகைத்தீ பம். (78)

இக்கடன்ஞா லத்தி லிறப்புப் பிறப்பென்னுந்
துக்கமுறு வோற்கருளுந் தூய்தீப-மிக்க
திருமணிசேர் சோணமலைச் செம்மலரின் முத்தின்
பருமணிநேர் கார்த்திகைத்தீ பம். (79)

மான்மீ னிகர்த்தவிழி மாதரார் மையலுற்ற
நான் மீளக் காண்பார்க்கு நற்றீபம்-வான்மீ
னுதிர்ந்ததென வேய்முத் தொளிர்சோண வெற்பிற்
பதிந்ததிருக் கார்த்திகைத்தீ பம். (80)

தீங்கினில்வீ ழாதடியார் சீராரு முத்தியெனும்
பாங்கினிலே செல்லப் பகர்தீப-முங்கின்மதி
சத்திரமேந் துங்காம்பாத் தானோங்குஞ் சோணவெற்பிற்
பத்திரமாங் கார்த்திகைத்தீ பம். (81)

பந்தத் தொடக்கைப் பரிகரிக்குந் தீபநிதம்
வந்தடியே னுள்ளம் வதிதீப-மிந்தத்
தரணிபணி சோணா சலமுடியினல்ல
பரணிவரு கார்த்திகைத்தீ பம். (82)

கானகவே டன்றனலிற் காய்ச்சியெடுத் துண்டீந்த
ஊனக மகிழ்ந்தினிதென் றுண்டீப-மான
சராசரமும் போற்றுந் தனியருணை வெற்பிற்
பராபரமாங் கார்த்திகைத்தீ பம். (83)

காசிமன்னன் றன்னைக் கவியாக்கிப் பின்பவன்சீர்
மாசிலுரு வந்தந்த வண்டீபங்-காசினிமீ
னாற்றுதவம் போலாங் கருணைவள ரன்பர்வினை
பாற்றுமெழிற் கார்த்திகைத்தீ பம். (84)

கல்லா லடியிற் கரங்காட்டி நால்வருங்குஞ்
சொல்லா லுணர்த்துஞ் சுபதீபங்-கொல்லா
விரதமொடு தென்னருணை மேவினருள் ளத்திற்
பரதமிடுங் கார்த்திகைத்தீ பம். (85)

மெச்சிநக ராசமகள் வேண்டுநல்ல கம்பனெனக்
கச்சிநகர் வாழுங் கனதீபம்-கொச்சையெயின்
மாமகளிர் வண்டன் மகிழருணை தன்னிலன்பன்
பாமருவுங் கார்த்திகைத்தீ பம். (86)

ஆனஞ் சாடுந்தீப மன்பர் பிறப்பிறப்பா
மூனஞ் சாடுந்தீப மொண்டீபம்-வானஞ்
செவித்திர வெல்லும்போற்றிச் சேரருணை வெற்பிற்
பவித்திரமாங் கார்த்திகைத்தீ பம். (87)

கேட்டவர மெல்லாங் கேடுபடா மற்கொடுத்தே
நாட்டமுட னாண்டருளு நற்றீபம்-வாட்டமில்லாப்
புள்ளிசேர் மான்கள் பொலியருணை கண்டுகடற்
பள்ளிதாழ் கார்த்திகைத்தீ பம். (88)

மானாய கன்னியுடன் மால்விடைமேல் வேய்ங்குழல்கேட்
டானாயர் முன்வந் தருடீபம்-வானார்
தருவதினி லுஞ்சிறந்த தாருவளர் சோணப்
பருவதம்வாழ் கார்த்திகைத்தீ பம். (89)

ஏறி வருந்தீப மேத்துமவர் வல்வினையை
றூறி வருந்தீப நோன்றீபஞ்-சீறிவரு

மஞ்சிபமா வுற்றறிகாண் மாவருணை வெற்பினிலின்
பஞ்சிறந்த கார்த்திகைத்தீ பம். (90)

பாம்பணியுந் தீபம் பத்திநெ றிசேரடியார்
தாம்பணியுந் தீபந் தனித்தீப-மாம்பல்
விகசிக்கும் வாவி மிளிரருணை வாழ்கற்
பகமொக்குங் கார்த்திகைத்தீ பம். (91)

நன்களிக்குந் தீப நவிலருமுண் ணாமுலையா
மின்களிக்குந் தீபம் விழைதீபம்-வன்களிறு
தண்ணருவி பெட்டையுடன் றணாடுஞ் சோணாவெற்பிற்
பண்ணவர்தேர் கார்த்திகைத்தீ பம். (92)

மங்களஞ்சேர் தீபமொரு மாசடையா மாசடையிற்
றிங்களஞ்சேர் தீபந் திருத்தீபம்-வேங்களுஞ்சேர்
மாலுமிரு வர்க்கரிதா மன்னருணை வெற்பிடைவிண்
பாலுயருங் கார்ததிகைத்தீ பம். (93)

பாதார விந்தம் பரவுந்த தொழும்பருக்கோ
ராதார மாகி யருடீபம்-போதாருங்
கொங்கிலங்குஞ் சோலை குலவருணை வெற்பினுமென்
பங்கினும்வாழ் கார்த்திகைத்தீ பம். (94)

சங்கரிக்கோர் பங்குந் தகையுடனே மற்றையொரு
பங்கரிக்கும் மாகப் பகிர்தீபம்-வெங்கரித்தோல்
போத்ததென மங்குல் பொலியருணை வெற்பிலன்பர்
பார்த்தருள்சேர் கார்த்திகைத்தீ பம். (95)

ஆணிப்பொன் னம்பலத்தி லாடுந்தீபம் பொல்லா
மாணிக்க தீபமகி மைத்தீபம்-வேணிக்க
ணீராருந் தீபமொழி னீடுமரு ணாசலத்திற்
பாராருங் கார்த்திகைத்தீ பம். (96)

அந்தச்சி ராங்கதனை யச்சுவத்தின் கீழ்வருத்திப்
பிந்தவ னேத்தவருள் பெய்தீபம்-வந்தார்க்
குதவிசெய்வோ மென்றருணை புற்றடியார் வேண்டும்
பதவிதருங் கார்த்திகைத்தீ பம். (97)

பண்டுபுள காசுரனைப் பாவந் தவிர்த்தாண்டு
கொண்டுவகை கூர்த்த குணதீபந்-தொண்டு
கரவிலா மற்செயவ்ார் காணருணை வெற்பிற்
பரவிவாழ் கார்த்திகைத்தீ பம். (98)

சிந்தா மணிகாம தேனு பதுமநிதி
யுந்தாழ்ந் தவர்க்கருள்செ யுந்தீப-நந்தா
வியப்புள்ள சோணமலை மேற்றிய நல்ல
பயப்புள்ள கார்த்திகைத்தீ பம். (99)

புத்திதருந் தீபநல்ல புத்திரசம் பத்துமுதல்
சித்திதருந் தீபஞ்சிவதீபஞ்-சத்திக்
குயிராகுஞ் சோணமலை யோங்கிவளர் ஞானப்
பயிராகுங் கார்த்திகைத்தீ பம். (100)

## வாழி

வான்வாழி மண்வாழி மன்னவனும் வாழியுய
ரான்வாழி மெய்ம்மையடி யார்வாழி-மேன்மேலுஞ்

சோபனவண் ணாமலையுந் தூயதிருக் கார்த்திகைநற்
றீபமும் வாழி சிறந்து.

*கார்த்திகைத்தீபவெண்பா-முற்றிற்று.*

உ

சிவமயம்

புராணிகர் சோணாசலபாரதியார்

இயற்றிய

# சோணாசலவெண்பா.

## காப்பு - வெண்பா

வாணாளை வீணாளா வையகத்திற் போக்காமற்
சோணா சலவெண்பாச் சொல்லுதற்கு-நாணாளு
மிங்கழுநீ ரானைநினை யேக்கமறக் காக்குமுக்கட்
செங்கழுநீ ரானைநினை தேர்ந்து

## நூல்

ஓங்காரபீடத் துறையும் பிரா நின்னைப்
பாங்காரக் காணப் பணித்திடா-யாங்கார
வெம்பிரமா நற்றிருமான் மெய்யதுமா றித்தொடர்மா
சம்பிரமா சோணா சலா. 1

கங்கைச் சடையுங் கருணைத் திருமுகமு
மங்கை மழுமானு மரைக்கசைத்த-பொங்கரவுஞ்
செந்தாளு மெந்நாளுஞ் சேவிக்க மேன்மேலுந்
தந்தாளுஞ் சோணா சலா. 2

எற்றைநாண மாதுமையோ டென்முன் வருவாயோ
வற்றைநா ணல்நா ளானநாண்-மற்றைநாள்

கன்மநாள் வீணாள் கரிநா ளிருட்நாள்
சன்மநாள் சோணா சலா. 3

தீவாய்ப் படநாகந் தீண்டினாலுந் துயர்கூர்ந்
தாவாவென் றேங்கி யெழுங்காம-னாவால்
விடாதரா வென்பார்க்கும் வெய்யவிட முண்டோ
சடாதரா சோணா சலா. 4

கோயில்வலஞ் செய்யேன் கும்பிடே னின்றுருகேன்
வாயிலெழுத் தஞ்சும் வழுத்துகிலே-னாயிற்
கடையாளாப் பேய்போற் கவல்கின்றேன் கங்கைச்
சடையாளா சோணா சலா. 5

மாதேவா சங்கரா மைக்கண்டா முக்கண்ணா
கோதேது மில்லாக் குணாகரா-பூதேசா
வோம்பவா வோம்பவா வுள்ளவா வுள்ளவா
சாம்பவா சோணா சலா. 6

மெய்ந்நூலை விட்டுவிட்டு வேறுவே றுள்ளபல
பொய்ந்நூலைக் கற்றுப் புலம்புகின்றா-ரென்னோர்க்கும்
பொல்லாவா தைக்குளிர்க்குப் போர்வையுர் கம்பளமா
சல்லாவா சோணா சலா. 7

பிறையிட்ட பொற்சடையெம் பெம்மானே நின்றா
ணிறையிட்ட வன்பா னினைந்து-முறையிட்டுங்
கேளாது போலிருந்தாற் கெட்டேனி னிக்கணமுந்
தாளாது சோணா சலா. 8

வேதாகமந் தெரிந்த மேலோ ருடன் கலந்து
மாதாகமான் புனற்காண் மான்பினுளப்-போதாகச்
சத்ததுவா னந்த சகசநிட்டை தந்தருளாய்
தத்துவா சோணா சலா. 9

மண்ணேறு பல்வகையா மன்பதைக ளத்தனையுங்
கண்ணேறு நீங்கிக் களிப்பதற்கோ-புண்ணேறு
சிந்தனையே னென்னையுமோர் சீவனென விவ்வுலகிற்
றந்தனையே சோணா சலா. 10

தண்டா மரையிலைமேற் றண்ணீரா வென்றனுள
மண்டாத் துயரா லலைகின்ற-கண்டாய்
சிலையெழுத்தா வோர்மொழியுஞ் செப்பகிலா யீதென்
கலையெழுத்தா சோணா சலா. 11

பேயுடனே நட்டம் பிரியமுடன் செய்பவனிச்
சேயுடனே சேராதென் செப்புவா-யாயுலக
மாமகண்டா வேதண்டா வண்டாண்டா வாலமுண்ட
சாமகண்டா சோணா சலா. 12

மாயாம லம்புணர்ந்து மாதவமாஞ் சைவநெறித்
தோயாம லம்புவியிற் சோர்கின்றேன்-றாயாகி
வேண்டவா வின்படியே மெஞ்ஞானப் பால்கொடுப்பாய்
தாண்டவா சோணா சலா. 13

துன்பக் கடல்வீழ்ந்த தொண்டனேன் றன்னைநீ
யின்பக் கடலாட்ட வெண்ணினா-லன்பர்
கடுப்பாரே வைவாரே கம்மியிவ னென்று
தடுப்பாரோ சோணா சலா. 14

தெய்வமுண்டென்றோர்வேளைதெய்வமின்றென்றோர்வேளை
மைவளருந் துட்டமன மிருந்தா-லுய்வதெவன்
ஈசனானென் றானூர்ந் தீண்டவா வாண்டாணீ
தாசனான சோணா சலா. 15

எத்தனை தான் கற்றென்ன வெத்தனைதான் கேட்டென்ன
வத்தனையு மற்றோர்க் கறைந்தென்ன-சித்தந்
தராசனார்க் கல்லாலுண் றாளுண்டோ மேருச்
சராசனா சோணா சலா. 16

அன்புவளர் தொண்டருள மாலயமா வெப்பொழுதுந்
தென்புவளர் தேவியுடன் சேர்ந்துவளர்-நின்புகழைப்
பாடுவேன் பந்தவினைப் பாசத்தை வேரறவே
சாடுவேன் சோணா சலா. 17

கருநிறத்த காகங் கனகமலை சார்ந்தாற்
றிருநிறத்த வாகுஞ் செயல்போ-லிருநிறத்த
வாகாரநா னுனைச்சார்ந் தன்பனாவேன் கருணா
சாகரா சோணா சலா. 18

வன்பா தகஞ்செய்யும் வஞ்சர்தமைச் சேராம
லின்பா தகஞ்ச நினைந்துவா-மூன்பா
நிதானந்தா மந்தாகினிக் குவந்தா யெந்தாய்
சதானந்தா சோணா சலா. 19

மான்செய்த கண்ணியொடும் வாலவடி வேலனொடும்
வான்செய்த காட்சி வழங்கொன்றால்-யான்செய்த
கன்மமா வந்துமுகங் காட்டகிலா யீதுனக்குத்
தன்மமா சோணா சலா. 20

வெய்யபிறப் பினுமுயர் வித்தாகு மாசையென
வுய்யநல்லோர் சொற்றநெறி யோராமன்-மையலிலே
யாழ்கின்றே னின்சீரரு ளெள்ளளவு மின்றித்
தாழ்கின்றேன் சோணா சலா. 21

முற்றா விளஞ்சேய்க்கு முண்டநோய்க் காமருந்து
பெற்றா ளருந்துகின்ற பெற்றிபோற்-சிற்றம்
பலத்துவந்த மன்பதைக் காப்பார நடஞ்செய்தித்
தலத்துவந்த சோணா சலா. 22

ஆட்டுகின்றா யாடுகின்றா யாடலையுங் காண்கின்றாய்
கூட்டுகின்றாய் கூடுகின்றாய் கொள்கைபல-நாட்டுகின்றாய்
ஞாலமெலா மிவ்வகையே நானறியே னின்னுடைய
சாலமெலாஞ் சோணா சலா. 23

என்னைப்போ லேழையிலை யெவ்வெவ் வுலகத்து
நின்னைப்போல் வள்ளலிலை நிச்சயமே-பின்னையே
யென்றொழிலே யாசித்த லில்லையெனா தீவதுநின்
றன்றொழிலே சோணா சலா. 24

நறும்பூ வுடன்சேர்ந்த நாருமண மெய்து
மிறும்பூ நன்றைய வெளியேன்-பெறும்பே
றதுவே தானாக வடியருடன் சேர்வேன்
சதுர்வேதா சோணா சலா.' 25

பத்தருக்குஞ் சித்தருக்கும் பண்ணவர்க்கும் விண்ணவர்க்கு
முத்தருக்கு மற்றவர்க்கு மூவரெனுங்-கருத்தருக்கு
நற்றுரையாய் வாழ்கின்றாய் நாயேற்கு நாயகனார்

சற்றுரையாய் சோணா சலா 26

வணங்காத் தலையும் வழுத்தாத நாவு
மிணங்கா மனமு மெமக்கே-யணங்கா
மிகுதியா வின்னம் விளம்புவதே னந்தோ
தகுதியா சோணா சலா. 27

என்னேநீ ராடப்போ மெண்ணமறந் தொருவன்
பின்னேசே றாடுகின்ற பெற்றிபோற்-கொன்னேவெங்
கன்மத்தைச் செய்து கழிக்கின்றே னல்லநர
சன்மத்தை சோணா சலா. 28

அண்ணா மலையென்று மண்டமெலாம் பெற்றெடுத்த
வுண்ணா முலையென்று முள்ளத்தே-யெண்ணாத
நாளில்லை நாயேற்கு னற்றாள லாதடையுந்
தாளில்லை சோணா சலா. 29

இலவுதனைக் காத்தே யிருங்குங் கிளிபோற்
குலவுகுடும் பத்தையே கோரி-விலகினேன்
மாதுரியா னந்தசுகம் வாய்க்குமோ வேழைக்குச்
சாதுரியா சோணா சலா. 30

நாட்டைவிட்டுக் காட்டையுற்று நற்கனிதே ரோர்சிறுவன்
வேட்டையிற்றப்புங்கொடிய வேங்கைகண்டு-கோட்டை
யரண்புகுந்தே யுய்ந்ததென யானுய்ய நின்பூஞ்
சரண்புகுந்தேன் சோணா சலா. 31

வானே முதலட்ட மாமூர்த்தியாவிளங்குங்
கோனே நினதுபதங் கூடாமல்-யானே
தனித்தேனோ விங்குத் தளரலிதற் கென்றே
சனித்தேனோ சோணா சலா. 32

தேவாரந் தன்னைச் சிரத்தையா நாயடியே
னூவாரப் பாடி நயந்துவிழிக்-கோவாரக்
கன்னிகரு முள்ள களித்துருகும் வாழ்வருளாய்
தன்னிகருஞ் சோணா சலா. 33

ஞாயிறுதிங்க ணயனஞ் செவ்வா யுமைமெய்
மேயபுத னின்மெய் வியாழமுறை-வாய
தனியாமோர் வெற்பு தழைவெள்ளி யேற்குச்
சனியாமோ சோணா சலா. 34

பெண்ணாசை யாதியாப் பேசுகின்ற மூவாசை
பெண்ணாசை வையகத்தி லேற்காதோ-அண்ணா
மலையானே கொண்டவர்யார் மற்றாசை தம்மிற்
றலையானே சோணா சலா. 35

ஓர்தனிரு தாண்முமல மோவுறவே நாற்கரணஞ்
சேர்தரவஞ் சக்கரமுஞ் சிந்தித்தா-றார்பொழுது
மேழுவே தத்திசையி னேத்தருளெட் டங்கமுறத்
தாழுவேன் சோணா சலா. 36

காலத்தே சென்றுசிவ கங்கையிலே நீராடிப்
பாலத்தே நீற்றைப் பரிந்தணிந்து-மூலமா
மந்திரமே போதிநினை மன்னிவலஞ் செய்வதுய்யுந்
தந்திரமே சோணா சலா: 37

நின்னைச் சதமா நினைக்குஞ் சிறியேற்கும்
பின்னை வறுமைப் பிணியுண்டோ-பொன்னைச்
சதாசிவ வென்றழைக்குந் தோகை புணர்சாம்ப
சதாசிவா சோணா சலா. 38

உடல்பொரு ளோடாவி யுனக்கே யளித்தேன்
கடலுல கங்காண வென்னைக்காவா-தடலுடனே
யிங்கடத்தை நீபுரிந்தா லேலர்பாற் கூறுவனென்
சங்கடத்தைச் சோணா சலா. 39

தன்னிகரில் சோண சயிலனே யென்றன்பாச்
சொன்னிகழ் பாமாலையன்று சூட்டினருக்-கிந்நிலத்தின்
முன்மானன் றெட்டறிய முண்டகத்தா ளன்றியுண்டோ
சன்மானஞ் சோணா சலா. 40

வாக்கின் வருகவென்றால் வாய்நோமே தாழ்ந்தோனைத்
தூக்கின் மலர்க்கை துவளுமோ-நோக்கின்
வலிக்குமோ நின்கடைக்கண் வள்ளலுக்கு முள்ளஞ்
சலிக்குமோ சோணா சலா. 41

நன்னெஞ் சுடனுன்ற னாண்மலர்த் தாள்பூசியே
னென்னெஞ் சுகல்லா யிருப்பதா-னென்னெஞ்சுங்
கல்லாபார் மேலென்னைக் காவாதென் காரணமோ
சல்லாபா சோணா சலா. 42

தஞ்சமென நின்கலமத் தாளடைந்து நானிருக்க
வஞ்சநம னென்பால் வருவானோ-நஞ்சமிக்க
பொங்கரா வேணிப் புனிதமார்க் கண்டனையாள்
சங்கரா சோணா சலா. 43

கரங்குவித்து மெய்சிலிர்த்துக் கண்ணீ ருதிர்த்துச்
சிரங்குனித்துத் தெண்டனிட்டுத் தேம்பி-யிரங்குனர்க்கு
வந்திடுவாய் கேட்டவரந் தருவாய் நாயேற்கென்
தந்திடுவாய் சோணா சலா. 44

ஒருவ னொருத்தியுடனேகைபெறக் கூடும்
பருவம் பனித்துளிபோற் பாய்த்து-கருவுற்
றுருவஞ்சார்ந் துற்பவித் திங்கோடி யுழலாநாள்
சருவஞ்சா சோணா சலா. 45

வன்பிறவி நோய்க்கு மருந்தா விருந்தடியார்
துன்பிறவி ழிக்குநினைச் சூழ்ந்தவருக்-கென்பிறசீர்
சிற்பரா வம்பலத்திற் றெய்வநடஞ் செய்தருளுந்
தற்பரா சோணா சலா. 46

ஒருரென் றில்லாம லோடெத்துப் பிச்சைக்கா
வூருராச் சுற்றியுழல் கின்றாய்-பேருரி
லேற்றுவா யென்றுன்னை யெப்படியா னம்புவது
சாற்றுவாய் சோணா சலா 47

அன்பார வுன்ற னடிக்கமலம் பூசித்த
வென்பார மென்னை யிரட்சித்த-னுன்பாரங்
காரணா தீதா கருணாகரா மழுமான்
தாரணா சோணா சலா. 48

பந்தக்கா லென்னப் பருத்தவுடல் சுமப்பே
னந்தக்கா லன்வெகுண் டெனாவிகொள-வந்தக்கா
லஞ்சலிப்பே னீவந் தருளாயே லென்செய்வேன்
சஞ்சலிப்பேன் சோணா சலா. 49

ஒருமணத்தை நீக்கி யுயர்நாவ லூரர்க்
கிருமணத்தைச் செய்தாண்ட தென்னீ-வதுமணத்தோ
மாட்சியோ வென்பாரேல் மங்கையுமை கங்கையிவர்
சாட்சியோ சோணா சலா. 50

ஞாதுரு மெய்ஞ்ஞான நவிலரிய நேயமென
வோதுறுமம் முப்பெருளி னுண்மைதணைப்-பேதுறுவேன்
றேர்வேனோ தேர்ந்துன் றிருவாளர் தஞ்சபையிற்
சார்வேனோ சோணா சலா. 51

ஞாலமிட லோடருந்து நாரணனே யாதியரிக்
காலமிடர் தீர்த்தெம்மைக் காத்தியென-வோலமிட
நஞ்சுமுண்டா வுன்னைவிட நாயேற் குலகிலொரு
தஞ்சமுண்டா சோணா சலா. 52

அபய கரமு மருள்சேர் முகமு
முபய பதமு முமையா-ளிபமுகன்சேய்
நண்ணவா மால்விடைமே னாயேன் சரணுனக்கே
தண்ணவா சோணா சலா. 53

அன்பே திரியா வருளே நெய்யாகமிக
நன்போக மகலா நாணாளு-முன்பேமெய்ஞ்
ஞானமாந் தீபமிட்டு நண்பொடுவாழ் வருள்சீர்ந்
தானமாஞ் சோணா சலா. 54

மணமென்று கூறியதோர் வாயாலே மற்றும்
பிணமென்று கூறுகின்றார் பின்புங்-குணமென்ற
வெம்மதி யேனானாலு மெய்யினைமெய் யென்றணுவுஞ்
சம்மதியேன் சோணா சலா. 55

மாசகல்ற வாதவூர் வள்ளல் வழங்குமணி
வாசகமே மாமறைக்கு மாண்பென்றே-பேசுவே
வங்கையா வீயெழுது மன்பே பெருஞ்சான்றாஞ்
சங்கையா சோணா சலா. 56

இரந்தும் பரிந்தே யிடுவென்னு நீதி
கரந்துவிடா திருக்கக் கச்சூர்ப்-பொருந்தி
யுணவா தரித்துநம்பி யுண்ண வளித்தாய்சீர்
தணவாத சோணா சலா. 57

பாலையளித் தாய்காழிப் பாலனா ரின்புறவே
சூலையளித் தாயப்பர் துன்புறவே-யேலவிவை
நன்மையோ வாயுண்முறை காமத்தினால் விளைந்த
தன்மையோ சோணா சாலா. 58

கற்பனையெ லாங்கடந்த காரணா தீதசக
தற்பரனே நின்றாள் சரண்புகுந்தே-னற்பனெனக்
கொள்ளாதே குற்றங் குரியாதே யன்னியமாத்
தள்ளாதே சோணா சலா. 59

பூசேன் விபூதிதனைப் பூனேன் சிவமணியைப்
பேசேன் பஞ்சாக்கரத்தைப் பேதமையை-வீசேன்
வலவனே போற்றிரிவேன் வாழ்வேனே வேணிச்
சலவனே சோணா சலா. 60

அளவை கடந்த வருளொளியே நின்பே
ருளவை யணுவு முணரேன்-களவகன்றோர்
தந்நிதியே மெஞ்ஞான தாண்டவா வானந்த
சந்நிதியே சோணா சலா. 61

தொண்டர்களு மாதவருந் தூயசிவ காமியுநல்
லண்டர்களுங் காணமன்று ளாடுகின்றாய்-பண்டிருவர்
காணோமே யென்று கருதுங் கமலப்பூந்
தாணோமே சோணா சலா. 62

ஆணிலே பெண்ணிலே யல்லா வுயிர்களிலே
வீணிலே யென்போல் விழைபவர்யார்-வேணி
வியாளனே பொல்லா வினையேனைக் காப்பாய்
தயாளனே சோணா சலா. 63

தொல்லை வறுமையினாற் சோர்ந்தாலு மென்மேனி
யில்லையெனும் லோபிகளை யாசியேன்-றில்லையிலே
வெம்பசிவா தைக்கழுஞ்சேய் வேண்டும்பா லாழிதந்த
சாம்பசிவா சோணா சலா. 64

கருணைபுரிந் தென்னைநீ காத்தியே லென்னே
யருணை யடைந்ததுண்டோ வன்பாத்-தருணமல
ரிண்டையுண்டோ தொண்டுண்டோ வெண்ணுண்டென்றன்
பர்செய்யுஞ் சண்டை யுண்டோ சோணா சலா. 65

திட்டுண்டு வெண்ணெய்த் திருடியுண்டு மாதராற்
கட்டுண் டடியுண்டாள் கண்ணனே-பிட்டுண்டு
வாழ்வெவர்க்கு நல்கவே மாறனடி யுண்டாய்நீ
தாழ்வெவர்க்குச் சோணா சலா. 66

தாயுமிலை தந்தையிலை தான்றனிய னானாய்நீ
சேயுமிலை சேய்களுக்குத் தேர்ந்திதனை-யாயுங்கால்
வர்க்கமிலை முன்பின் மரபிலைநீ வத்துவென்னத்
தர்க்கமிலை சோணா சலா. 67

நண்ணியவெற் போவெள்ளி நற்சிலையும் பொற்சிலையாம்
புண்ணியமா தேவியன்ன பூரணியே-யுண்மையிவை
நம்புமே யென்றுபத்தூர் நாடியிரந் துண்டகதை
சம்புவே சோணா சலா. 68

விளைவான் மலிந்திடு நெல்வேலி யுனக்குண்டவ்
விளையான் குடிமாற வின்பா-முளையதனை
வாரிவருங் காலை மறுக்காயோ மாய்விடைமேற்
சாரிவருஞ் சோணா சலா. 69

அண்ணா மலையானா யப்பநீ தாயுமையு
முண்ணா முலையானா ளுண்மைசொல-வொண்ணாதா
மிக்கதோ நல்லோர் வியந்துதுதி செய்யத்
தக்கதோ சோணா சலா. 70

சூதாடப் பொய்பேசத் தூயோரை நிந்திக்க
வாதாட வஞ்சிக்க வல்லவன்யான்-வேதாவின்
றோதகமோ நின்றாடு திக்கறியே னென்னுடைய
சாதகமோ சோணா சலா. 71

குகைநமசி வாயர் குருநமசி வாயர்
தகையுறு வெண்பா மாலைசாத்திப்-புகழைடைந்தா
ரேத்துகின்றே னுள்ளபடி யில்லையவர் போலச்
சாத்துகின்றேன் சோணா சலா. 72

நந்தவ னம்புக்கு நறுமா மலரெடுத்துச்
சுந்தரப்பன் மாலைதொடுத் தணிந்தே-யெந்தை
யருணேசா வென்பாரை யாபத்திற் காக்குந்
தருணேசா சோணா சலா. 73

முயலகன்மேல் வைக்கா முளரித் தாளிந்த
மயலகன்மேல் வைத்து மகிழ்வா-வியல்சேர்
பரதமே செய்க பலனுனக்கு முண்டு
சரதமே சோணா சலா. 74

பூவடிவம் வெற்பரையன் புத்திரிக்குத் தீண்டரிய
தீவடிவ நின்றனக்கேற் சீர்க்கச்சி-மாவடிக்கீழ்த்
தந்தேகம் வாடாமற் றன்வளைத்தா ணீயிளைத்தாய்
சந்தேகஞ் சோணா சலா. 75

நன்மார்க்க நன்மார்க்க நண்ணுஞ் சரியையுறு
முன்மார்க்க மேனு முயலாத-வென்மார்க்கந்
துன்மார்க்க மாதலினாற் சூழ்வதெங்கே மேலான
சன்மார்க்கஞ் சோணா சலா. 76

பல்லாயிரந் தரமாப் பாலன் குறையெல்லாஞ்
சொல்லா திருக்கவிலை சொல்லியுமென்-பொல்லாத
புத்தியின் றோடத்தாற் பொருத்தமின்றோ வாண்டருளச்
சத்தியின்றோ சோணா சலா. 77

ஆடரங்கா வன்பர்மன மானந்தக் கூத்துகந்தாய்
கோடரங்கா னென்றன் கொடியமன-நீடரங்க
மண்டிப்பாய் வேக மடங்கவெங்கு மோடுவதை
தண்டிப்பாய் சோணா சலா. 78

மழைகுளிர் வெங்காற் றுருமுவல் லிடிதீவெய்யில்
குழைபசிநோய் கள்ளர் கொடுசேரல்-விழைகூற்றாற்
றீங்குவா ராதுலவஞ் செய்வாரை நீயிருந்து
தாங்குவாய் சோணா சலா. 79

பூமாலை கையும் புனன்மாலை நேத்திரமும்
பாமாலை நாவும் பரிந்தணியுந்-தாமே
நெடுமாலைத் தேடவைத்த நீயெனைச் சேர்பார் கூய்த்
தடுமாலைச் சோணா சலா. 80

முற்காசி மன்னன் முகத்தைத் குரங்காக்கிப்
பிற்காசி தந்தவருள் பெய்தனையே-யெற்காசி
யப்படியேன் றண்டித் தருள்புரியா யந்தோயான்
றப்படியேன் சோணா சலா. 81

தென்பாகத் தேவியுடன் சேர்ந்துசிறுத் தொண்டரிட்ட
வன்பாங் கறியை யருந்தற்கே-யின்பாப்போய்ச்
சீராளா வென்றழையுஞ் சேயையெனத் தந்தளித்த
தாராளா சோணா சலா. 82

ஆக்குவாய் காப்பாய் யழிப்பாய் மறைப்பாய்பின்
னோக்குவா யாவு நொடிப்போதே-தாக்கு
மிமியேற்கு நேரந்தா னெத்தனையோ கற்பந்
தமியேற்குச் சோணா சலா. 83

தாயிலாச் சேய்போற் றவிக்கின்றே னென்றுரைத்தா
லாயிலா னானென் றறைவையென-வாயிலா
வூமனே யொத்தியா னொன்றமுரை யேனிதழிழ்
தாமனே சோணா சலா. 84

அனங்காணா னஞ்சுண்டா னம்மை வினையாற்
புனையுடம்பும் பாதியாய்ப் போனான் றினமுந்தா

னேமாந்த மானிடனென் றெள்ளாம லேத்துவதென்
றாமாந்தர் சோணா சலா. 85

சங்கரியத் தங்கொளலாற் சக்கரமான் மன்னுதலால்
வெங்கரி பயந்தவணன் மேவலா-லிங்கரிது
நிற்குருவே யென்னுருவ நீமுழுதுங் கொண்டுறைவாய்
சற்குருவே சோணா சலா. 86

மோன முடிவே மொழியவரு மானந்த
ஞானவடியே நின்னல முழுதுந்-தீன
னியம்புமே னெவ்வா றினியவருள் செய்யாய்
சயம்புவே சோணா சலா. 87

முத்தே மணியே முழுவயிரப் பொற்றூணே
சித்தே மெமதுகுல தெய்வமே-சுத்தகுண
மேருவே நற்கருணை மேகமே வந்தடைந்தேன்
றாருவே சோணா சலா. 88

சோதிக் கலாமா தொழும்பனேன் றன்னைமிக்க
வாதிக் கலாமா மணிஅரவம்-பாதிக்
காலாமதிகஞ் சேரவைத்த காரணநின் றாட்குச்
சாலமதிகஞ் சோணா சலா. 89

அண்டாண்ட கோடி யருளா லனித்தடிமை
கொண்டாண்ட சோதிக் குருமணிநீ-கண்டாய்
சுமுகனே யாகவெனைத் தொண்டுகொள் வாயன்பர்
சமுகனே சோணா சலா. 90

திருவல கிட்டுத் திருமெழுக்கு மிட்டு
மருவுதிருக் கோலமிட்டு வாழ்த்திப்-பெருகுதளி
கம்பத்தே கத்துடனே கைகூப்பிச் சூழ்வதுநற்
சம்பத்தே சோணா சலா. 91

உருவா யருவா யுருவருவாய் நின்ற
வொருவா வுபதேச மோதக்-குருவாய்
வரவேண்டு முன்றன் மலர்ச்சரணத் தன்பு
தரவேண்டுஞ் சோணா சலா. 92

ஆரூரு மம்பலமு மானந்த கானமெனும்
பேரூருங் கட்டமெனப் பேணுகிலேன்-சீரூர
நித்தியமே நின்னூர் நினைக்கின்றேன் முத்திபெறச்
சத்தியமே சோணா சலா. 93

பாரறிய விண்ணறியா பாதாளந் தானறியா
யாரருன்றறிவர் னருஞ்சீர்த்தி-யோரணுவும்
யானறியாத் தண்மையதே யெம்பெருமா னின்னமுநீ
தானறியாய் சோணா சலா. 94

கார்த்திகைக்குக்கார்த்திகைநாட் காட்சிபெறக்காட்டுகின்ற
சீர்த்திவளர் மெய்ஞ்ஞான தீபத்தை-யேத்தி
மதுரநேயத் தமிழால் வாழ்த்த வரந்தாராய்
சதுரனே சோணா சலா. 95

வானே முதலட்ட மாமூர்த்தியா யமர்ந்தா
யேனே வுலகுய்ய வெண்ணியோ-வானே
றதிபதியே ஞான வருணிதியே சீலச்
சதிபதியே சோணா சலா. 96

சம்புவே யென்றுனது தானினைக்க வொட்டாம
லைம்புலத்தார் கூடி யலைக்கின்ற-வெம்பிறவி
வெந்தோட நீங்கு விபவருமருள் வாய்மிகவுஞ்
சந்தோடஞ் சோணா சலா. 97

சோதனை செய்யாதே சுயவடிவா வந்தென்னை
யாதரிப்பாய் காட்டி லருச்சுனனின்-பாதமலர்
நாடினான் வேடுவனா நண்ணினாய் வில்லாலே
சாடினான் சோணா சலா. 98

வெள்ளையா வின்னும் விளம்புதென் மென்கனிதேர்
கிள்ளைமொழி போலிதனை கேட்ருள்க-பிள்ளைநான்
மாதாநீதொண்டனான் வன்பதிநீ யேழைநான்
தாதாநீ சோணா சலா. 99

அருணாசலா வென்றே யன்புடனேபோற்றி
யிருணாச மெய்த்தீப மிட்டோ-பெறுவாழ்வைச்
சிந்தையே செய்தளவு தேர்ந்துரைக்க வொண்ணாதென்
றந்தையே சோணா சலா. 100

**சோணாசலவெண்பா - முற்றிற்று.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

புராணிகர் சோணாசலபாரதியார்

இயற்றிய

# சோணாசலசதகம்

சோனைநிக ராகச் சொரிமும் மதச்சிறுக
னானைமுகன் றாதைசோ ணாசலத்துத் தேனைச்
சகம்பொதிந்த பார்வதிக்குத் தக்கிணனை யென்புல்
லகம்பொதிந்து பெற்றே னருள். 1

சோதிவடி வாயிருவர் தேடத் துலங்குமுக்க
ணாதிவடி வார்சடையி னார்கங்கை-பாதிச்
சசியணிந்தார் சோணா சலமதனைச் சற்றா
லசியமின்றிச் சேர்வா மிது. 2

சேராத நெஞ்சினிடைச் சோணாசலத் தார்க
ணாராத காத லனமவானேன்-பாழாழி
சந்திரனுஞ் சூரியனுந் தந்நிலைவிண் டானுமுழ
லந்தகனென் முன்சே ரானால். 3

சோகந் துடைத்தருள்வாய் சூர்ப்பனகச் சிறு
ணாகந் தனையுரித்த நம்பனே-மேகமொடு
சந்திரன் றாழ்சோணா சலவாம பாற்றைய
லந்திவன்னத் தையா வருள். 4

சோமன்றலைக் கணிந்த சோணாசல வுனரு
ணாமந்தனை யென்வாய் நல்குவாய்-காமன்
சரமுன்மேற் பூப்போலச் சார்ந்திடினு நம்மே
லரமெனச் சாராமை யருள். 5

சோறுண்டிட லுடுத்தல் தூங்க லிவைகனின்க
ளாறுதலுண் டோநஞ்சோ ணாசலா-நீறு
சயமாக மேனி தனிலெனது நெஞ்சா
லயமாக வென்று மிரு. 6

சோலைநெறி யாரூரோ சோணமலை யோவிசையெண்
ணாலையிசைப் பார்வாயோ நம்பாட்டோ-மாலைச்
சயமழித்த காசியோ சார்தில்லை யோவா
லயமென்று நீசா ரிடம். 7

சோதித்தென் னின்ன றுடைகா ரெனவியங்க
ணாதிக்குஞ் சோணமலை நாதனே-வாதித்த
சங்கத்தார் நெஞ்சின்மடந் தானொழித்தாய் வேதன்மா
லங்கத்தா யந்தீவ னத்தா. 8

சோகித் திருப்போரூர் துய்யசிவன் றாட்கிருக
ணாகித் துயர மகற்றாமல்-யோகத்தார்
சங்கத்துச் சோணா சலமதனி லேகாம
லங்கிக்குச் சென்றுலைவோ ராய். 9

சோபிக்கு ஞானவுருச் சோணா சலத்தார்தா
ணாபிக் கமலற்கு நாடரிதே-பாவிச்
சனங்கட்குக் காணுமோ சத்திவிளக் காற்பா
லனங்கொண்டு காணுங்கண் ணன்பு. 10

## சோணாசலசதகம்

## முற்றிற்று.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

புராணிகர் சோணாசலபாரதியார்

இயற்றிய

# திருவருணைக் கலிவெண்பா

கார்பூத்த மாலுங் கருமாவாய்க் காணரிய
பார்பூத்த சீரடியும் பங்கயத்தோ-னேர்பூத்த 1

அன்னவடி வாயு மறியா முடியுமன்பர்
நன்மனங்கொள் சோண நகத்தனே-சின்மயமாம் 2

உண்ணா முலையம்மை யோர்பாகங் கொண்டுதிரு
வண்ணா மலைவிளங்கு மைம்முகனே-விண்ணவர்கள் 3

தந்தியக்க நீங்கமத தந்தி யுரிவைபோர்த்
தந்திவண்ண நீத்தருளைத் தந்திட்ட-சுந்தரனே 4

நஞ்சைதனி யாதீர நஞ்சைவளை சோணமலை
நஞ்சையணி கண்டத்து நம்பனே யைஞ்சமையாஞ் 5

செம்பம் பலநெல்லை சித்ரசபை குற்றாலம்
பம்புமணி யம்பலமா லங்காடு-உம்பர்தில்லை 6

பொன்னம் பலங்கூடல் புக்கவெள்ளி யம்பலங்க
வின்னடஞ்சே சோணமலை யீசனே-வன்னமலி 7

தேவன் றுரைச்சந் திரசேக ராலயந்தெற்
காவண்கயிலை யதுவடக்காத் தேவர்புகழ் 8

சோமநா தம்மேற்குச் சொல்பீமே சங்கிழக்கே
யாமத்தி நின்ற வருணையாய்-காமர் 9

வடக்கு திகளழகை வானிற் றுறக்கஞ்
சுடர்ப்பொன்னிலங்கை தெற்காந்தொல்லோர்-கடந்துபுகழ் 10

பொன்னிலங்கண் மூன்றும்விற் போல விளங்காடு
நன்னிலங்கொள் சீரருணை நாதனே-தொன்மை 11

அவந்தி துவாரகைமேற் காக்காஞ்சி கீழாஞ்
சிவன்சீர் மாயாமதுரை தெற்காய்ப்-பவந்தீருங் 12

காசி யயோத்திவடக் காகநடுநின்றமரர்
பூசிக்குஞ் சோணப் பொருபனே-ஆசற்ற 13

கங்கை யமுனை கவுதமியே நன்மதைசீர்
மங்காச் சரசு வதிவடக்காய் ஐங்கரத்தோன் 14

கொட்டியகா வேரி குமரிதெற்காய்ப் பாய்நடு
வுட்டிகமு சோணகிரி யோங்கொளியே-சிட்டர்புகழ் 15

மண்ணிலிங்கங் காஞ்சி மழையிலிங்க மானைக்கா
விண்ணிலிங்கத் தில்லை விபன்முதூர் திண்ணர்சார் 16

வாயுலிங்கக் காளட்தி மற்றிவைக்கு மத்தியாத்
தேயுலிங்க சோணகிரிச் சிற்பரனே-காய 17

மிறக்கமுத்தி நல்கு மெழிற்காசி வந்து
பிறக்கமுத்தி நல்குதிரு வாரூர்-அறத்தார் 18

றனைப்பார்க்க முத்தி தருதில்லை யிவைக்கு
ணிணைக்கமுத்தி நல்கருணை நின்றாய்-அனைத்தானாய் 19

கற்பரல்கள் பஞ்சாய்க் கனமழையோ பூவரலாய்
வெற்புநினூ ராகி விளங்கினவே-பொற்பொலியும் 20

அந்திவண்ணத் தாகி னமல மலர்ப்பாதம்
புந்திமிசைக் கொண்ட பொழுதத்தே-கந்தமலி 21

வள்ளவா யாரல்லி வாயவளை யாரவொளி
வெள்ள விளையுள்வயல வேலிவளை யுள்ளு 22

ரழல்வரையா ராழிலா யாலயில்வா யுள்ளா
ருழியுலவா பொல்லை யருள்வாய்-விழிநிறைந்த 23

கஞ்சக் கழலிணைகள் கையாற் றுதித்துனது
தஞ்சத் தடைந்தேன் தயைதருவாய்-விஞ்சொளிய 24

சந்திரனுஞ் சூரியனுத் தாமிருவிற் கால்போல
அந்தவில்லம் பாய்மலைமே லார்தீபம்-இந்துகதிர் 25

மத்திநிற் குந்தீயாகி மாலயனுண் ணியாகு
மித்திருநாள் கண்டார்க் கிடருண்டோ-வித்தகமார் 26

அருள்பழுத்தோங்கு மானந்தத்தருவேயற்புதவமலநித்தியமே தெருள்பழுத்தோங்குஞ்சித்தர் தம்முரிமைச்செல்வமே யருணை யந்தேவே,யிருள்பழுத்தோங்குநெஞ்சினேனெனினுமென் பிழைபொறுத்துநின்கோயிற்,பொருள்பழுத்தோங் குஞ்சந்நிதிமுன்னர்ப்போந்துனைப்போற்றுமா றருளே. 4

மறையுமம்மறைவின் வாய்ம்மையுமாகிமன்னிய வள்ளலே மலர்மே. லிறையுமாதவனு மிறையுமின்னவனென் றெய்திடா விறைவனேயடியேன், பொறையுகன்னிறையு மறிவுநற்செறியும் பொருந்திடாப்பொய்யனே னெனிலு, மறையுநற்புகழ்சே ரருணையை விழைந்தே னங்கெனை யடைகுவித்தருளே. 5

தேடுவார் தேடுஞ் செல்வமே சிவமே திருவருணாபுரித் தேவேயேடுவாரிதழிக்கண்ணியெங்கோவே யெந்தையேயெம்பெருமா னே, பாடுவார்க்களிக்கும் பரம்பரப்பொருளே பாவியேன் பொய்யெலாம்பொறுத்து,நாடுவார்புகழுநின்றிருக்கோயி னண்ணுமாயெனக்கிவணருளே. 6

உலகுயிர்தொறுநின்றூட்டுவிட்டாட்டு மொருவனேயுத்தமனே நின், னிலகுமுக்கண்ணுங் காளகண்டமு மெய்யிலங்கு வெண்ணிற்றணியெழிலுந், திலகவொண்ணுத லுண்ணாமுலை உமையாள்சேரிடப்பாலுங்கண் டடியேன், கலகவைம்புலம்செய்து யரமுமற்றைக்கலக்கமு நீக்குமாவருளே. 7

அருட்பெருட்கடலே யானந்தநறவே யடிநடுவந்தமுங் கடந்த, தெருட்பெருமலையிற் றிருவண்ணாமலையிற்றிகழ்நயஞ்சோதி யேசிவனே, மறுட்பெருங்கடலின் மயங்குகின்றேனென் மயக்கெலா மொழிந்துவன்பிறவி, விருட்பெருங்கடல்விட் டேறநின்கோயிற்கெளிய னேன் வரவரமருளே. 8

கருணையங்கடலே கண்கண்முன் றுடைய கடவுளே கமலன்மாலறியா, வருணையெங்கோவே பரசிவானந்த வமுதமே

யற்புதநிலையே, யிருநிலம்புகுதா தெனையெடுத்தாண்ட வின்பமே யன்பர்தம்மன்பே, பொருணலம் பெறநின் சந்நிதிக் கெளியேன் போந்துணைப் போற்றுமாறருளே. 9

ஏது செய்திடினும் பொறுத்தருள் புரியு மென்னுயிர்க்கொரு பெருந்துணையே, தீதுசெய்மனத்தார் தம்முடன் தேராச் செயலெனக்களித்த வென்றேவோ, வாதுசெய் புலனால்வருந்தல் செய்கின்றேன் வருந்துறாவண்ணமெற்கருளித், தாதுசெய்பவனேத் தருணையங்கோயிற் சந்நிதிக்கியான்வரவருளே. 10

*திருச்சிற்றம்பலம்.*

## திருவருட்பதிகம்.

*முற்றிற்று.*

